# காசி_ஹிமாலயா
# தீர்த்த யாத்திரை



**1995 செப்டம்பர் 20 முதல் அக்டோபர் 17 வரை**

# காசி-இமாலய தீர்த்த யாத்திரை



டில்லி, ஹரித்வார், ரிஷீகேசம், கௌரீகுண்ட், கேதார்நாத், ஜோதிர்மட், பத்ரீநாத், கோகுலம், கோவர்த்தனம், மதுரா, விருந்தாவனம், ஆக்ரா, அயோத்யா, அலகபாத், காசி, நேப்பாள், சார்நாத், புத்தகயை, கல்கத்தா

1995 செப்டம்பர், 20 முதல் அக்டோபர் 17 வரை



# அணிந்துரை

**ஓம் நமோ பகவதே ராமகிருஷ்ணாய**

பாரதநாடு மிகப்பெருநம் புண்ணிய நாடு. ரிஷிமுனிவர்களின் ஆன்மீக ஞானத்தின் உறைவிடம் இது. உலகமடங்கலுக்கும் சாந்தியை அளிக்க வல்லஆன்மீக ஞானச்சுடர் எப்போதும் ஒளிவிட்டுக் கொண்டிருக்கும நாடு இது.

இத்தகைய நாட்டில் ஒருவன் பிறப்பதும் புண்ணிய பலத்தால் மட்டுந்தான் முடியும் என ஞானியர் கூறுவர். பிறந்தால் மட்டும் போதாது. பாரதத்தின் சிறப்பிற்குக் காரணங்களாய் விளங்கும் மலைகளுடையவும நதிகளுடையவும் சிறப்பு என்னவென்று நேரிடையாய் அறிந்து, அதனால் பொங்கி வரும் பேரின்ப உணர்வில் மூழ்கவும் வேண்டும்.

தேவதாத்மாவாகிய இமயமலையின் சிறப்புக்களும, அதன் சிகரங்களில் திகழ்கின்ற பேராலயங்களின் ஒளியும் அழகும், மனிதனின் மனத்தை எளிதிற் கவர்ந்து இறைவனிடம் கொண்டு சேர்க்கும. அஃதே போன்று, கங்கை யமுனை முதலிய நதிகளும் அவைகளின் தீர்த்த கட்டங்களும் மனிதனின் மனமாசுகளைக் களைந்து அவனுக்குத் தூய்மையும் வீடு பேறும அளிக்கின்றன.

நவ நாகரீகத்தின் எல்லையைக் கண்டவர்களும், உலக சுகபோகங்களில் திளைக்கின்றவர்களுமாகிய மேலை நாட்டார் பலர் மன அமைதிக்காகவும், நிறைவிற்காகவும் பாரதத்திற்கு வந்து வாழ்வின் குறிக்கோளை அடைய முயற்சிக்கின்றனர். அவர்கள் நமது வேதாந்த தத்துவ நூற்களையும் அவைகளை உபதேசித்தளித்த ரிஷி முனிவர்

களையும் வாழ்த்தி வணங்குகின்றனர். அம்முனி புங்கவர்கள் வாழ்ந்து தவம்புரிந்த சோலைகளை யும், குகைகளையும், தரிசித்துப் பேரின்பம் அடை கின்றனர் பிறநாட்டவரின் நிலைமை இதுவானால் இங்கே பிறந்து வளர்ந்தவர்களது நிலைமைபற்றித் தனியாக எடுத்துக்கூற வேண்டிய தேவையில்லை.

இமயமலையின் சிறப்பு சொல்லுக்கு அடங்குவதன்று. ஸ்ரீசுகப்பிரம்மரிஷி பரீக்ஷித்திற்குப் பாகவதம் உபதேசம் பண்ணிய ஹரித்வாரம இமய மலையின் கோட்டை வாயிலாகும். 'ஹரே ராம...... ஹரே கிருஷ்ண' மகாமந்திரம் பாரதநாடு முழுவதி லும் சென்று முழக்கமிட்ட நாமபிரச்சார ஆச்சாரி யர் சற்குரு அபேதானந்தர் திருவடிகள் ஜலசமாதி கொண்ட "கங்கல்" என்ற கங்காநதி படித்துறை ஹரித்வாருக்கருகாமையிலுள்ளது.

ரிஷி முனிவர்களின் தவவாழ்வால் தூய்மை பெற்ற ரிஷீகேசம இமயமலைச் சாரலில்தான் திகழ்கின்றது. ரைப்யன் ஏன்ற ரிஷி ரிஷீகங் களை (ஐம்பொறிகளை) அடக்கித் தவஞ் செய்து வாழ்ந்த இடமே ரிஷீகேஷம் ஸப்தரிஷிகள் இங்கு தவவாழ்க்கை வாழ்ந்திருந்தனர். ஸ்ரீசங்கராச்சாரிய ஸ்வாமி முதலிய ஆச்சாரியர்களும தவஞ்செய்த இடமிது. தற்போதும எண்ணிறந்த ஞானிகளும் அடியார்களும் இங்கு தங்கி தவம செய்து வருகின்றனர்.

இமயமலைச்சிகரத்தில் திகழும் மற்றொரு திருத்தலம் கேதாரநாதம். 'இங்குள்ள கேதாரேசுவரர் சுமம்புலிங்கமாகும். 11,000 அடி உயரமுள்ள ஒரு சயவெளியில் இக்கோவில் இருக்கிறது. பஞ்ச-பாண்டவரகளுக்காக இந்தச் சுயம்புலிங்கம் உண்டானதென்றும், அவர்களே முதன் முதலாக

ஆலயங்கட்டினர் என்றும் கூறுவர். பிற்காலத்தில் ஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமிகள் ஆலயத்தைப்புதுப்பித்து அதன் பூசாரிகளாக தென்னிந்தியாவிலுள்ள சைவப்பெரியோர்களை ஏற்படுத்தினார்.

ஸ்ரீ சங்காரச்சாரிய சுவாமிகள் இறைவனோடு கலந்ததும இவ்விடத்தில் தான்.

பத்ரிநாதம் என்பது பிறிதொரு திருத்தலம் ஆகும். நர நாராயண பர்வதங்களுக்கிடையில் இத்தலம் அமைந்துள்ளது. நர நாராயண ரிஷிகள் தவம் செய்த இடமாகும் இது. வேதவியாசர் சுகர், கௌடபாதர் முதலிய முனிபுங்கவர்கள் வாழ்ந்து தவம் செய்த இடமாகும். பகவான் வேதவியாசர் வேதங்களை நான்காக வகுத்தும் மகாபாரதம எழுதியதும் இதற்கு அருகாமையில் உள்ள வியாசர் குகையிலாகும். பகவான் ஸ்ரீ கிருஷ்ணருடைய ஆணைப்படி தவம் இயற்ற உத்தவர் இங்கேதான் சென்று சேர்ந்தார்.

புண்ணிய பாரதத்தின் தெய்வீக சக்திக்கும் பெருமைக்கும் காரணமான கங்கை, யமுனை, சரயூ என்ற நதிகளும் இமயமலையிலிருந்து புறப்படும் தெய்வீக தீர்த்தங்கள் ஆகும் இங்கு உள்ள தீர்த்தத்துறைகளில் மூழ்கி எழும் அடியார்களுக்கு சுகம் மட்டுமல்ல முக்தியும் ஏற்படும் இகத்திலும் பரத்திலும், நற்கதி அடைய மற்றொன்றும் வேண்டியதில்லை.

ஸ்ரீ ராமஜென்ம பூமியான அயோத்தியும், ஸ்ரீ கிருஷ்ணரின் லீலாரெங்கமாகிய விருந்தாவனமும் முக்கியமான புண்ணிய ஸ்தலங்கள் ஆகும். திரேதாயுகத்தில் அவதரித்த ஸ்ரீ ராமனின் வரலாற்றை வெளிப்படுத்துகின்ற எண்ணற்ற

நினைவுச் சின்னங்கள் அயோத்தியில் இன்றும் காணலாம். ஸ்ரீ கிருஷ்ணனின் அவதார ஸ்தலமாகிய மதுராபுரியில் ராசக்ரீடை முதலிய லீலைகள் நடத்திய விருந்தாவனமும் பாரதீயர் அனைவருடையவும் வழிபாட்டு மையங்கள் ஆகும். அந்தப்புண்ணிய பூமிகளில் நிறைந்து நிர்க்கும் பக்தி வெள்ளத்தில் மூழ்கித்திளைக்க முற்பிறவியில் புண்ணியம் செய்திருக்க வேண்டும்.

வருணா, அசி என்ற நதிகள் ஒன்றுசேரும் இடமான வாரணாசி (காசி) மிகபுனிதமான ஒரு புண்ணிய ஸ்தலமாகும் கங்கைக்கரையில் காசி விசுவநாதர் ஆலயம் திகழ்கிறது. பண்டை-காலம் முதலே காசி விசுவநாத தரிசனம் மோட்சம் தருவது என்று ஹிந்துக்கள் நம்பி வழிபட்டு வருகிறார்கள்.

காசியிலிருந்து 300 கிலோ மீட்டர் கிழக்கே இருப்பது 'கயா' வாகும் இந்தியர்கள் மட்டுமல்ல உலகமெங்குமுள்ள புத்த மதத்தவரும் இதனை தீர்த்த ஸ்தலமாக கருதுகின்றனர்.

சித்தார்த்த அரசகுமாரன் கடுந்தவம் செய்து போதம் பெற்று புத்தபகவான் ஆனது இங்கே தான். அந்தப்போதிமரம (அரசு) இன்றும இங்கு காணப்படுகிறது.

வங்காளத்திலுள்ள பல திருத்தலங்களும் யாத்திரை வாசிகளை கவருகின்றன. ஸ்ரீ ராம கிருஷ்ணதேவர், சாரதாதேவி, விவேகானந்த சுவாமிகள், ரவீந்திரநாத தாகூர் முதலியோரின் தெய்வீக ஒளி சுடர்விட்டிலங்கும திருத்தலங்களைத் தரிசிப்பவர்களின் உள்ளத்தில் தெய்வீக அமைதி ஏற்படுவது திண்ணம.

இமாலய யாத்திரையில் உள்ளங்குளிர வைத்த கங்காதேவியின் பிறப்பிடமும், அதைத் தொடர்ந்து அதன் பிரவாகத்தையும் கண்டு கண்டு அது கடலில் கலக்கும் இடமான கல்கத்தாவை அடையும் போது. தீர்த்த யாத்திரியின் உள்ளத்திலும் இன்ப கங்கை ஊற்றெடுக்கும்.

ஆன்மீக நிறைவும், இன்பமும் கிடைக்கின்ற காசி இமாலய யாத்திரைக்கு தலைமை வகித்து அன்பர்களை ஆசீர்வதிக்கும் அம்பிகானந்த சுவாமிகளுடையவும், கண்வீனர் திரு S. கிருஷ்ணன் நாயருடையவும் · இத்தகைய நல்ல முயற்சிகள் எவ்வளவு சிரமம உள்ளதாயினும் ஆண்டவன் திருவுள்ளம் அதுவென கூறுவது பொருத்தமே, இவர்களுடைய நல்ல முயற்சி வெற்றியடைவதாக! இதற்கு முன் நடந்தது 16 தீர்த்த யாத்திரைக்களும் நல்ல முறையில் நடந்தது இறைவன் திருவருளே.

தென்னிந்திய பயணிகளுக்கு தென்னிந்திய முறையில் உள்ள உணவு வசதி ஏற்பாடு இதன் பொறுப்பாளர்களுடைய நல்லெண்ணத்தையும், கடமையுணர்வையும வெளிப்படுத்துகிறது.

17-ம் முறையாக இவ் ஆண்டைய யாத்திரைக்குரிய ஏற்பாடுகள் தொடங்கி இருக்கின்றன. 28 நாட்கள் யாத்திரைக்கான வாகன கட்டணம், ஜாகை, உணவு இவைகளெல்லாம் சேர்ந்து ஒரு ஆளுக்கு 7600 ரூபாய் கொடுக்க வேண்டும். பயணிக்கு இவ்வளவு சிறப்பான ஒரு

யாத்திரைக்கு இந்தத் தொகை இலாபகரமே. இந்த யாத்திரை நடத்தும் பொறுப்பாளிகளுக்கும், பயணிகளுக்கும் எல்லாவித மங்களமும பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர் கொடுத்தருள்வாராக!

இவண்,

**ஸ்வாமி மதுரானந்தா**
விவேகானந்தா மந்திரம்,
வெள்ளிமலை.





இன்பமும் மனநிறைவும் பெறுவதற்காக மனிதன் அனேகவழிகளில் இடையறாது முயன்று கொண்டே இருக்கிறான். தொடக்கநிலையில் ஐம்பொறிகளுக்கும் உரிய உலக விஷயங்களில் முயன்று அவைகள் மூலம் இன்பமும் மனநிறைவும் அடைவதற்காக எல்லோரும் முயல்கின்றனர். ஆனால் அனுபவம் மூலம் உலக சுகங்களின் நிலையாமையையும், அவைகளிடம் கொண்ட அளவற்ற பற்றுதலினாலேற்படும் துயரங்களையும் உணரும்போது, துன்பமற்றதும் அழிவில்லாததுமாகிய சுகம் எங்கே, எங்ஙனம கிடைக்குமென்று ஆராயத் தொடங்குகின்றான். அவ்வாறு ஐம்பொறிகளுடையவும் விஷயானந்தத்தைத் துறந்து, பஜனானந்தமாகிய இறைவழிபாட்டில் மனம் திரும்புகிறது. ஆலயவழிபாடு, தீர்த்தயாத்திரை, நல்லோருறவு முதலியவற்றில் அப்போது மனிதனின் மனம் இன்பத்தைக் காண்கிறது. இத்தகைய பஜனானந்தமாகிய வழிபாட்டின்பமும், தேசம், காலம் ஆகியவற்றின் எல்லைக்குட்பட்டவையே என அறியும்போது மனிதன் முற்றிலும் அகநோக்குடையவனாகி ஆத்மானந்தத்தை தேடுகின்றான். அதன் பயனாக கடவுட் காட்சி பெற்று பேரின்பமடைகின்றான்.

மிகச்சில புண்ணியவான்களுக்கு மட்டுமே உலக இன்பங்களில் சலிப்பு ஏற்பட்டு இறைநாட்டத்தில் இன்புற முடிகிறது அவர்களிலும ஆயிரத்தில் ஒன்றோ, இரண்டோ பேருக்கு மட்டுமே ஆன்மீக சாதனைகளில் நம்பிக்கை ஏற்பட்டு

வெற்றிபெற முடிகிறது. அதனால் மனிதனின் எல்லா முயற்சிகளுடையவும் மேலான குறிக்கோள் ஆன்ம முன்னேற்றமே என்ற நம்பிக்கையுடன் மனிதன் உலகில் வாழ வேண்டும். அத்தகைய நம்பிக்கை வாழ்க்கைப் பயணத்திலேற்பட்டிருக்கும் யாவருக்கும் எப்போதும் இருக்க வேண்டியது அவசியம் அப்படியிருக்க தீர்த்த யாத்திரிகளின் காரியத்தை எடுத்துச் சொல்லவும் வேண்டுமா? பக்தர்களுக்கிடையே இந்த நம்பிக்கையை வளர்ப்பதற்காக ஸ்ரீ அம்பிகானந்த சுவாமிகள் அனேக ஆண்டுகளாக நடத்தி வருகின்ற தீர்த்த யாத்திரை நிகழ்ச்சிக்கு எங்கும் நிறைந்த இறைவன் எல்லா வகையான மங்களங்களும் அருள்புரியப் பிரார்த்திக்கிறேன்.

சக்ரானந்தசுவாமி

ஸ்ரீராமகிருஷ்ணாசிரமம், சாஸ்தமங்கலம்,
திருவனந்தபுரம்—695 010

தொலைபேசி: 62125.





## ஸத்குருவே நம:

அனந்தகோடிப் பிறவிகளில் ஈட்டிய புண்ணியத்தின் பயனால் மட்டுமே ஓர் உயிருக்கு மனிதப்பிறவி கிடைக்கின்றது. மஹான்களுடைய உபதேசங்களும், அருளாசிகளும் கொண்டு தடை இன்றி ஒழுகிச்செல்கின்ற தூயதெய்வீகமானதோர் ஆறு போன்றது மனிதவாழ்க்கைப் பயணம் பாரதத் தாயின் விரிந்த மார்பு வழியாக விரைந்து செல்லும மாண்புடைய கங்கா நதி இமயமலைச்சிகரங்களிம் இருந்து கீழே இறங்கி சமவெளி இடங்களை தொட்டு தழுவிக்கொண்டு பல்லாயிரக்கணக்கான மக்களுக்கு ஆறுதலும், அபயமும் 'அழிக்கின்றாள் இன்றும் அந்த புனிதப் பெயரைக் கேட்டதும தலைவணங்காதவர்கள் இல்லை. இலைகளும், பூக்களும் நிறைந்த மரங்களின் கூட்டங்களையும் செடி கொடிகளின் சோலைகளையும் கொண்டு நிறைந்த அழகு வாய்ந்த ஆற்றங்கரைகள் புண்ணியவான்களான ரிஷிமுனிவர்களின் கடும் தவத்தால் அருளும், ஆற்றலும பெற்றுத் திகழ்கின்றன. பேராறுகள், மாமலைகள், பெருந்தவசிகள் நீராடும் படித்துறைகள் போன்ற தெய்வீக உணர்வுகளை எழுப்புகின்ற அழகிய காட்சிகள் பாரதத்தில் ஏராளம் உண்டு. அவைகளையெல்லாம் ஒருமுறை காண்பதற்கும், பண்பாட்டின் பாரம்பரியத்தை புதுப்பிப்பதற்கும் பாரதியன் ஒருவனுக்கு வாய்க்கின்றதோர் தருணம் அவனுக்கு சொர்க்க சுகத்தை

கொடுக்கிறது. முனிபுங்கவர்களாகிய தெய்வீகக் கவிகளின் கவிதைப் படைப்பிற்கு புத்துயிர் கொடுத்த காட்சிகள் இன்னும் நாம் காணாமல் இருக்கின்றோம் வானளாவும் மலைச்சிகரங்களும் இதர இயற்கைக் காட்சிகளும் இமயமலைச்சாரல் முதல் கன்னியாக்குமரி கடல் வரையிலும் பரவிக் கிடக்கின்றன. பேராலயங்களும் பெரும் ஞானிகளின் தவச்சாலைகளும், சமாதி ஸ்தலங்களும் தரிசனம் செய்து புண்ணியம ஈட்டுவதற்கான அரியதோர் வாய்ப்பாகும். தீர்த்த யாத்திரை உடலும் மனமும் தெய்வீக அனுபூதியின் பரவசத்தைப் பெறுகின்ற மிக மேலான இந்த முயற்சி வாலிபர் முதல் வயோதிகர் வரையுள்ள யாவருக்கும் நன்மை பயப்பதாகும். வாழ்க்கைப் போராட்டத்தில் முனைந்து வெறிபிடித்த வாழ்க்கையால் உள்ளம் உடைந்தவர்களுக்கு அமைதி நிறைந்த வாழ்வின் இனிமையை இத்தகைய தீர்த்த யாத்திரைகள் அளிக்கின்றன. அசுரகுணங்கள் நிறைந்து அதன் பயனாம மனித வாழ்க்கை அழிந்தொழிந்து போவதற்கு முன்னால் அருள்நிறைந்த திருக்கோயில்களை தரிசிப்பதற்கும் கங்கை போன்ற புண்ணிய நதிகளில் மூழ்கி பாவங்கள் போக்குவதற்கும் இறையருளால் இது நல்லதொரு வாய்ப்பாகும். பாரத புண்ணிய பூமியை வலம் வருகின்ற இந்த யாத்திரை ஒருவரது வாழ்வை பேரின்ப மயமாக்குவதற்கு துணை புரிவதாகுக.

இவண்,

**ஸ்வாமி சத்யானந்த ஸரஸ்வதி**
ஸ்ரீராமதாஸமிஷன்
செங்கோட்டுக் கோணம்.



பெரியோரிணக்கமும், அதன் மூலம் இயல்பாகவே கிடைக்கின்ற ஆன்ம ஞானவுந்தான் எல்லாச்சமய சாத்திரங்களுடைவும் சாரமான தத்துவம் தீர்த்தயாத்திரை வெற்றிபெற வேண்டுமாயின் பெரியோர்கள் அதில் கலந்து கொள்ளல் வேண்டும் பெரியோர்களின் பார்ப்பிடங்கள் தாம் தீர்த்தயாத்திரைத் தலங்களாகின்றன நமது ஆலயங்களுடையவும், புண்ணியத்தலங்களுடையவும், தொடக்கத்தை ஆராய்ந்தால், அவைகளின் மூலஸ்தானமாக ஏதாவதொரு துறவியின், தியாகம் நிறைந்ததும சத்தியம் முதலிய நற்குணங்கள் நிரம்பியதுமான வாழ்க்கை என்று கண்டு கொள்ள முடியும்.

வாழ்வின் மேலான குறிக்கோள் கடவுட் காட்சியாகும் ஆன்ம போதமே கடவுட்காட்சிக்கான ராஜபாதை தனக்கு அன்னியமாக வேறொன்றுமில்லை என இயல்பாகவே காண்கின்ற புண்ணியாத்மாக்களையே பெரியோர்கள், நல்லோர்கள் என்று அழைக்கிறோம்.

நாம் தேடிநிற்கும சாந்தியினுடையவும், சுகத்தினுடையவும அழிவற்ற சுரங்கம் பெரியோர்களின் பாதங்களில் தான் உறைகின்றது. பெரியோர்களின் திருஅருளால் ஆன்மாவின் அழிவற்ற சாம்ராஜ்யத்திற் புகுந்து நமக்கு அமர வாழ்வெய்த முடியும்

பெரியோர்களைச் சேர்ந்த எல்லா விஷயங்களும் நமக்குள்ளிருக்கும் தெய்வத்தன்மையை எழுப்புபவையே அது பற்றியே அவர்களது உறைவிடங்களும், வார்த்தைகளும் நமக்கு ஒளியையும், ஊக்கத்தையும் தந்து வழிகாட்டிக்கொண்டிருக்கின்றன. பரம பாகவதனாகிய அபயானந்த சுவாமிகளுடன் நடைபெறும் தீர்த்தயாத்திரை மிக அரியதோர் ஆன்மானுபூதியாகவே இருக்கும் சுவாமிகளின் அருள் நிறைந்த முன்னிலையினால் பயன் நிறைந்ததாகின்ற காசி-ஹிமாலய தீர்த்த யாத்திரைக்குள்ள நல்வாய்ப்பு ஏராளம் பேருக்குக் கிடைப்பதாக.

ஸத்சங்கத்தின் (பெரியோர் இணைக்கத்தின்) அனுபூதியும் அதன் தரிசனமும் நிறைய நிறைய தந்தருளுவதற்கு அபயானந்த சுவாமிகளுக்கு முடியும்.

சுவாமிகளின் கருணையும் அன்பும் தீர்த்த யாத்திரிகளுக்கு நிழலாக திகழ்வதாக!

மக்கள் மேல் வைத்த அன்பினாலுந்தப் பெற்று பெரிய லக்ஷியத்துடன் ஆக்க இந்த யாத்திரையை நடத்திச் செல்ல சுவாமிகளுக்கு நீண்ட ஆயுளும், ஆரோக்கியமும் ஆண்டவனருள் வாராக என்று வேண்டுகின்ற

**சுவாமி சரஸ்வதிஆனந்தி,**
ஸ்ரீ நாராயண தர்மஸங்கம் டிரஸ்ட்
சிவகிரிமடம், வர்க்கலை-695 141



# காசி-ஹிமாலயா யாத்திரை

## விளக்கம்

20—9—'95 (புதன்) ஒன்றாம்நாள்

காலை 9-40 மணிக்கு திருவனந்தபுரத்தில் இருந்து கல்கத்தாவிற்குப் புறப்பாடு.

21—9—'95 (வியாழன்) இரண்டாம்நாள்

ரயிலில

22—9—'95 (வெள்ளி) மூன்றாம்நாள்

மதியம 3 மணிக்கு கல்கத்தா சென்று ஓய்வு.

23—9—'95 (சனி) நான்காம்நாள்

கலகத்தாவிலுள்ள முக்கிய தலங்களைக் காணுதல் அன்று கல்கத்தாவிலேயே தங்கி ஓய்வு.

**கல்கத்தா:**

பாரதத்திலுள்ள மிகப்பழமையும் பெருமையும் வாய்ந்ததோர் மாநகரம மேற்கு வங்க நாட்டின் தலைநகராகிய இவ்வூர் ஜனத்தொகையில் முதலிடம் பெற்று நிற்பதாகும. ஹுக்ளி நதியிலுள்ள ஹெளராபாலமும் மற்றும் பெரும பெரிய மாளிகைகளால் சூழப் பெற்ற இம்மாநகரம் அற்புதக் காட்சிகளாம் கட்டிடக்கலைக்கான பேர் போன இந்நகரில் எத்தனையோ பெரிய மகான்களும் தேசபக்கர்களும தோன்றி

உள்ளனர். ஸ்ரீவிவேகானந்த சுவாமிகள், மகாகவி ரவீந்திரநாத் தாகூர், சுபாஸ்சந்திரபோஸ் தேசபந்து சி.ஆர் தாஸ் ஆகியோரின் பிறப்பிடமிது. வங்காள நாட்டில் சைதன்ய மகாபிரபு, அரவிந்தர் போன்றோர் தோன்றினர். அத்தகைய புண்ணிய நாடிது.

## நேதாஜி பவன்:

நேதாஜி சுபாஷ்சந்திரபோஸ் தங்கியிருந்தது இங்குதான். இப்போது இஃதோர் புனிதத்தலமாகத் திகழ்கிறது. இந்த வீட்டில் தங்கி இருந்தவாறே 1943-ல் போஸ் அற்புதமான முறையில் மறைந்து போனூர் நேதாஜியின் பொருட்கள் இங்கு காட்சிக்கு வைக்கப்பெற்றுள்ளன.

## பேலூர் மடம்:

ஹுக்ளி நதியின்கரை ஸ்ரீராமகிருஷ்ண தேவரின் பெயரில் விவேகானந்த சுவாமிகள் கட்டிய பேராலயமும், மடமும்.

ஸ்ரீராமகிருஷ்ணமிஷனின் தலைமை அலுவலகம் இங்குதான். ஸ்ரீராமகிருஷ்ணமிஷனைச் சேர்ந்த பிரமமச்சாரிகளுக்கான குருகுல கல்வியும் பயிற்சியும் அளிப்பதற்கானதோர் பிரம்ம வித்யாலயம் இங்குள்ளது.

ரா கி. மிஷனது பொறுப்பில் நடைபெறும் ஓர் கல்லூரியும, தொழிற்கல்லூரியும், மருத்துவ மனையும இங்கு உள்ளன. "எழுந்திரு, விழித்திரு கருதிய கருமம் கைகூடுமவரை சலியாதுழைத்திரு" என்று பறைசாற்றிய சுவாமி விவேகானந்தரின்

செயல்முறை வேதாந்தம் வழி பணி செய்து வாழும் துறவிய பெருமக்கள், தங்கள் பணிகளை வெற்றிகரமாகச் செய்து உலகெங்கும் வெற்றிக் கொடியை நாட்டியுள்ளனர்.

விவேகானந்த சுவாமிகளின் சமாதிபீடம் இங்குதான் அதற்கருகாமையிலேயே ஸ்ரீ சாரதா தேவியார், ஸ்ரீபிரமானந்தசுவாமிகள் ஆகியோரின் சமாதி பீடங்களும் உண்டு. பாரதத்திற்குள்ளும் வெளியிலுமுள்ள பக்தர் கூட்டம் தினமும் இங்கே வருகிறது.

**தட்சிணேஸ்வரம் ஆலயம்:**

கங்கைக் கரையிலுள்ள மகாகாளி கோவில் ராசமணி என்றவோர் ராணி கட்டியது. இந்தக் கோயிலில் வாலிபவயதிலேயே ஸ்ரீ ராமகிருஷ்ணர் பூஜாரியானார். தீவிரமான பக்தியினால் காளி தேவியின் காட்சியைப்பெற்றார். இக்கோயிலில் 12 சிவாலயங்களும், ஒரு ராதா காந்தர் கோயிலுமுள்ளன.

**கல்கத்தா காளி கோயில்:**

காளி கட்டடததிலுள்ள இக்கோவிலுக்கு 350 ஆண்டுகள் பழமை உண்டு. தட்சயாகத்தில் ஓம குண்டத்தில் குதித்து உயிரை விட்ட சதீதேவியின் உடலை தோளில் சுமந்து தன்னை மறந்து தாண்டவமாடிய சிவனை அதிலிருந்து தடுக்க விஷ்ணு பகவான் சதீதேவியின் உடலை சக்கராயுதத்தினால் முறிக்கத் தொடங்கினார் தேவியின் விரல்களில் ஒன்று முதலில் விழுந்தது இங்கு தான் எனக்கூறப்படுகிறது. அதனால் அங்கு ஏற்பட்ட தேவி கோயிலுக்கு காளிகட்டம் என்று பெயருண்டாயிற்று. நாளடைவில் அது கல்கட்டா என்று மருவியது.

## விக்டோரியா நினைவாலயம்

விக்டோரியா ராணியின் நினைவாகக் கட்டிய ஒரு மார்பிள் மாளிகை எட்வர்ட் ஏழாமன் சக்கரவர்த்தி தான் இதற்கு அடிக்கல் நாட்டியது அந்தச்சக்கரவர்த்தியின் மகன் ஜார்ஜ் அஞ்சாமன் 1921-ல் இம்மாளிகையைத் திறந்து வைத்தார்.

## 24—9—1995 (ஞாயிறு) 5-ம் நாள்

காலையில் 5 மணி கல்கத்தாவிலிருந்து கிளம்பி காமார்புகூர், ஜயராம்வாடி ஆகியத்தலங்களை தரிசித்து துர்க்காபூரை அடைந்து ஓய்வு.

## காமார்புகூர்

தேசதுரோகிகளான முகலாயருடையவும், ஆங்கிலேயர்களுடையவும் கொடிய அரசாட்சியிலும் வறுமையிலும், அறியாமையிலும் உழன்று தரும போதமும் கெட்ட இந்து சமூகத்தையும் அதன் மூலம் உலகனைத்தையும் முன்னேற்ற வந்து அவதரித்தவர் தான் ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சர். அவரது பிறப்பினால் புனிதமடைந்த காமார்புகூர் இன்னொரு தீர்த்த தலமாகத்திகழ்கிறது. அவர் பிறந்த புனிதவீடு முதலியவற்றை அங்கே காணலாம்.

## ஜயராம் வாடி:

ஸ்ரீராமகிருஷ்ண தேவரின் வாழ்க்கைத் துணைவியாரும் நித்திய கன்னிகையுமான ஸ்ரீசாரதாதேவி பிறந்து வளர்ந்தது ஜெயராம்வாடியிலாகும். இதுவும் ஸ்ரீராமகிருஷ்ண பக்தர்களின் தீர்த்ததலமாகும்.

**25—9—'95 (திங்கள்) 6-ாம் நாள்**

அதிகாலை 5 மணிக்கு துர்க்காபூரிலிருந்து கிளம்பி, கயாவில் போய் ஓய்வு.

**26—9—'95 (செவ்வாய்) 7-ாம் நாள்**

காலை 6 மணிக்கு கயாவில் உள்ள முக்கிய இடங்களை பார்த்து காசியில் ஓய்வு.

**கயா:**

சித்தார்த்த அரசகுமாரன் தவஞ்செய்த புண்ணிய தலம். அவருக்கு போதம் கிடைத்தது இங்குதான் போதிமரம் (அரசு) இப்போதும நிற்கிறது. அப்புனித மரத்தின் இலையை விலைக்கு வாங்கலாம். இங்கு பெரியதோர் புத்தர் கோயிலுள்ளது.

பர்மா, சிலோன், சிங்கப்பூர், மலேஷியா சைனா, தாய்லாந்து ஆகிய நாடுகளிலுள்ள புத்தமதத்தினர் இங்கு வந்து பற்பல விஹாரங்கள் கட்டியுள்ளனர். இந்த விஹாரங்களில் ஒவ்வொரு நாட்டின் தனிக்கலை நுட்பங்களை காணலாம.

பல்குனா நதிக்கரையில் புகழ் பெற்றதோர் விஷ்ணுபாத ஆலயமுண்டு அங்கே பலிகருமாதிகள் செய்வது மிகவும் சிறப்புடையது என ரிஷீ முனிவர்கள் கூறியுள்ளனர். இந்த கயா சிரார்த்தம் செய்வதற்காகவே பக்தர்கள் இங்கு வருகின்றனர்.

## 27—9—'95 (புதன்) 8-ஆம் நாள்

காலையில் துயிலெழுந்து காசியின் புண்ணிய கங்கையில் நீராடுகிறோம். பின்னர் ஸ்ரீவிசுவநாத தரிசனம், நீராடுதுறைகள், சாரநாத் துளசியானஸ ஷேத்திரம் காசிராஜாவின் அரண்மனை, துர்க்கையம்மன் கோவில், குகை மந்திரம முதலியனவும் தரிசித்தல்.

**காசி**

பாரதத்தின் மிகச்சிறந்த புண்ணிய நகரம் காசி பண்டைக்காலம் முதலே உலகின் பல திசைகளிலிருந்தும பக்தர்கள் கால்நடையாக வந்து காசியை வழிபட்டு முக்திப்பேறு பெற்றனர்.

பார்வதி கல்யாணத்தின் பின் சிவனும், பார்வதியும் இங்கு வந்து நிரந்தரமாக தங்கி இங்கு உயிர் விடுகிறவர்களுக்கு சிவசக்தியாகிய முக்தியை கொடுக்கிறார்கள். இந்த இடத்திற்கு அவிமுக்த மென்று பெயருண்டு. பிரம்ம குலத்தில் வந்த 'காசன்' என்ற ராஜரிஷி இங்கு அரசாட்சி செய்து வந்ததால் இதற்கு காசி என்று பெயர் வந்ததென 'ஹரிவம்சம்' கூறுகிறது.

புராணப்புகழ்பெற்ற ஹரிச்சந்திரமஹாராஜா காசிராஜ்யத்தை ஆண்டுவந்தார். அவர் பேரில் ஒரு தீர்த்த கட்டமும், ஒரு மசானமும் உண்டு மொத்தம 64 தீர்த்த கட்டங்களில் (நீராடும்-துறைகள்) 8 எண்ணம் மிக முக்கியமானவை.

1) ஹரிச்சந்திர காட் 2) ஆவ்ராதகேசுவரகாட்
3) ஸ்ரீ பார்வதீ காட் 4) ஐப்யேசுவர காட்
5) மஹாலய காட் 6) ப்ருகு காட்
7) சண்டேசுவர காட் 7) கேதார் காட்

இந்தத்தீர்த்த காட்டுகள் காசிவிசுவநாதர் ஆலயத்திற்கு கிழக்குப் மேற்குமாக இருக்கின்றன. இந்த காட் அல்லது தீர்த்தக் கட்டங்களில் ஒவ்வொரு பெரியவர் நிறுவிய ஆலயங்களையும தற்போது காணலாம். அவி முகதத்தின் தீர்த்த கட்டங்களில் குளிப்பது, ஜப தியானங்களில் ஈடுபடுவது சிரார்த்ததானாதிகள் செய்வது முதலிய எந்த கருமங்கள் செய்பவர்களுக்கும் பக்தியும முக்தியும உண்டாகுமென்பது இந்துக்களின் நம்பிக்கையாகும்.

கங்கையில் இரண்டு போஷக நதிகளாகிய 'வரணா' வினுடையவும் 'அஸி' யினுடையவும் நடுவிலுள்ள தலமாகிய வாரணாசியின் ஜனங்களை 'காஷாயர்கள் எனக்கூறுவர். காஷாய உடை அணிந்தவர்களுடையவும் வேத விற்பனர்களுடையவும் தலந்தான் காசி. காசியின் சிறப்பை மகாபாரதம், கந்தபுராணம் முதலிய தெய்வீக நூல்கள் கூறுகின்றன.

மாலை வேளையில், கங்கைநதி வழியாக ஓடத்தில் போகும்போது தீர்தத துறைகளிலுள்ள ஆலயங்களுடையவும், பேரழகு வாய்ந்த காசியம் பதியினுடையவும காட்சி நமக்கு மயிர்க்கூச்சலை உண்டாக்கும.

**விசுவநாதர் ஆலயம்:**

காசி விசுவநாதர் ஆலயத்திலுள்ள சிவ லிங்கத்தை பிரம்மதேவன் வந்து பிரதிஷ்டை பண்ணியதென 'ஹாலாஸ்யம'. (திருவிளையாடற் புராணம்) கூறுகிறது. கங்கையில் நீராடி யாருக்கும் இங்கே பூஜை அபிஷேகம் செய்யலாம். இது இவ்வாலயத்தின் தனிச்சிறப்பாகும்.

இக்கோயிலை இன்றுள்ள நிலையில் 1776-ல் கட்டியவர் பக்தர் திலகமாகிய அஹல்யாபாய் ஹோல்கர் ஆவார். ஔரங்கசீப் என்ற கொடியவன் அப்போதிருந்த பெரிய கோயிலை இடித்து பள்ளியாக மாற்றினான். 1835 ல் ரஞ்சித்சிங் என்ற ராஜா அந்தப்பள்ளியின் ஒரு பாகத்தைக் கோயிலாகக்கட்டி, கோபுரத்தில் தங்கமுலாம் பூசினான்.

காசியில் பித்ருதர்ப்பணம் முதலியவை செய்தல் மிகப்புண்ணியமாகும். இறந்தவர்களின் எலும்பைக் கங்கையில் கரைப்பது புண்ணியம நமது யாத்திரைவாசிகளுக்குத் தேவைப் பட்டால் அதற்கான வசதிகள் செய்து தரப்படும்.

**சாரநாத்:**

பகவான் புத்தர் ஞானோதயம் பெற்ற பின் முதன் முதலில் ஞானோபதேசம பண்ணியது சாரநாத்திலாகும். அசோக சக்கரவர்த்தி புத்த சமயப் பிரச்சாரத்திற்காக முதலில் கட்டிய அசோக ஸ்தூபியும், கோயிலும் இங்குள்ளன. சாரநாத் பார்த்தபின் அன்றிரவு காசியில் ஓய்வு.

28—9—'95(வியாழன்)9-ம் நாள்

காலை 11 மணி முதல் காசியிலுள்ள பிற புண்ணிய தலங்களைத் தரிசிக்க கிளம்புதல்.

## பனாரஸ் இந்து பல்கலைக்கழகம்

பண்டிதமதனமோஹன மாளவியாஜீ இந்தப் பல்கலைக்கழகத்தை நிறுவினார். இதன் வளைவினுள் ஸ்ரீபிர்லாஜீ நிறுவிய ஸ்ரீவிசுவநாதர் ஆலயம் உள்ளது. அது கண்கொள்ளா காட்சியாகும். இவ்வாலயம் சலவைக்கல்லாலானது. முதல் மாடியில் சிவபெருமானையும் இரண்டாம் மாடியில் லட்சுமி நாராயணரையும் பிரதிஷ்டித்துள்ளர்.

## துளஸி மானஸமந்திர்

ராமசரிதமானஸம் என்ற அரிய ஹிந்தி ராமாயண நூலின் பாடல்களையும் ராமாயண காட்சிகளையும் இங்கு காணலாம் இதனை ஹிந்தியில் எழுதியவர் கோஸ்வாமி துளசீதாஸ-ராவார். இந்தக்கோயிலுக்கும் இரண்டு மாடிகளுண்டு கீழே ஸ்ரீராமரைப் பிரதிஷ்டித்துள்ளனர். மாடியின் வாசலில் துளசிதாஸரது சிலையைக் காணலாம். மின் சக்தி மூலம் அச்சிலையானது தலை ஆட்டிக் கொண்டு ராமாயணம் வாசிப்பது எல்லாருடைய உள்ளத்தையும் கவரும். வாசிக்கிற ஒலியை கேட்கலாம். கம்பூட்டர் மூலம் இது நடக்கிறது இராமாயண இதிகாசத்திலுள்ள சீதாகலியாணம், வனவாசம் போதல், சீதாபகரணம், சுக்ரீவநட்பு அனுமனின் இலங்கைப் பயண, ராவணவதம், முதலிய முக்கிய நிகழ்ச்சிகளை இங்கே அசைவுடன் காட்டுவர் காண்போர் அதிசயிக்குமாறு காட்சிகள் அமைக்கப்பெற்றுள்ளன.

ஸ்ரீகிருஷ்ணரின் ராசலீலை, பூதனா மோட்சம் முதலியனவும் இவ்வாறு உயிருள்ளவை போன்று காட்டுவர்.

## துர்க்கா மந்திர்

துளசீமானஸ மந்திரின் பக்கத்தில் தான் துர்க்கா மந்திர்.

## தொல் பொருட்காட்சி நிலையம்

கங்கையின் அக்கரையிலுள்ள காசி ராஜாவின் அரண்மனையில் இது நிறுவப்பெற்றுள்ளது பழைய வரலாற்றுப் பொருட்களை இங்குப் பாதுகாத்து வைத்துள்ளனர். பரம்பரை உரிமை உடைய ஒரு அரசர் இன்றும் இதற்குள் வசித்து வருகிறார். இங்கும் ஒரு குகைக்கோவில் உள்ளது.

காலை 11 மணிக்கு தரிசனங்கள் முடித்து நேப்பாளம் செல்பவர்கள் மதியம் 12-15 மணிக்கு காசி விமான நிலையத்தில் சென்று சேரவேண்டும் 1-15 மணி விமானம் புறப்பட்டு 2-25 க்கு காட்மண்டு விமானநிலையம் சென்று சேருகிறது அன்று காட்மாண்டு சுற்றி பார்த்தலும் ஓய்வும்.

நேப்பாளம் வராதவர்கள் காசியிலே தங்கி ஓய்வு எடுத்துக்கொள்ள வேண்டும்.

## நேப்பாளம்

சீனாவுக்கும் பாரதத்துக்கும் பூட்டானுக்கும் இடையே உள்ள எழில் மிக்க சிறிய நாடு. சமீப காலம் வரை இங்கு அரசன் ஆட்சி நடந்து வந்தது. இதன் தலைநகரம் காட்மண்டு இப்பட்டணம் சுமார் 100 கி மீ சுற்றளவு கொண்டதும் இமயமலையின் உச்சியில் சுற்றும் மலை உச்சிகளால் சுற்றப்பட்டு எந்நேரமும் இளம் குளிர் கால நிலையுடன் சுற்றுலா பயணிகளின் பூலோக சுவர்கமாக விளங்குகிறது.

உலகத்தின் ஒரே ஒரு ஹிந்து நாடு. சிவ தலங்களில் காசியை போல் மிக முக்கிய கோவில் தான் இங்குள்ள பசுபதிநாத கோவில். பத்ரிநாத்தில் மஹாவிஷ்ணு எவ்வாறு சிறப்புடன் விளங்கு-கிறாரோ அதேபோல் சிவபெருமான் சிறப்புடன் விளங்குவது பசுபதிநாத்தில், இங்குள்ள சிற்பக் கலையானது சீனா, பூட்டான், ஜப்பான் முதலிய வெளிநாடுகளுடன் தொடர்புடையதாகும.

முக்கிய கோவிலாகிய பசுபதிநாத கோவிலி-லிருந்து சுமார் 3கி மீ. தொலைவில் ஸ்ரீ பார்வதி தேவியின் திருக்கோவில் உண்டு. இவ்விரண்டு திருக்கோவிலுக்குமிடையே ஏராளமான கோவில்-களும் அவ்விடங்களில் 5000 சிவலிங்கங்கள் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளதும, உலகில் வேறெங்கும் காணக்கிடைக்காதகாட்சியாகும். இங்கு கோவிலை சுற்றி எண்ணிலடங்கா ருத்திராட்ச கடைகள் உண்டு இந்த பயணத்தில் ருத்திராட்ச மாலை விலை குறைவாக இங்கு வாங்கலாம்.

அரசர்கள் வாழ்ந்து ஆட்சி செய்த அரண் மனைகள் இன்று அருங்காட்சியமாக காட்சி அளிக்கிறது இங்கு பார்க்கலாம். பழையதும் புதியதுமான இந்த அரண்மனைகள் எழில்மிகு கலை அலங்காரத்துடன் நேப்பாளிகளின் கலைத் திறனுக்கு எடுத்துக்காட்டாக தலை நிமிர்ந்து நிற்கிறது.

நேப்பாள் யாத்திரைக்கு செல்வோர் Identification-க்காக Identification கார்டோ ரேஷன் கார்டு, ஓட்டுநர் கார்டு; Parsport முதலியவை-களில் ஏதேனும் ஒன்றின் போட்டோஸ்டாச்சு காப்பியோ உடன் கொண்டு வரவும்.

நேப்பாளில் வாங்கும் வெளிநாட்டு பொருள்களுக்கு Air Port-ல் டியூட்டி அடிப்பார்கள் ஆகையினால் பொருட்கள் வாங்கும் பயணிகள் இதை நினைவில் வைக்க வேண்டும்.

போகவர விமானகட்டணம் நபர் ஒன்றுக்கு 1-2-'94 தேதிப்படி ரூபாய் 2000/ ஆகும் அத்துடன் அங்கு ஆகும் எல்லாவிதமான செலவுகளும (1 கைடுக்கும சேர்த்து) பயணிகள் தாங்களே செய்துகொள்ள வேண்டியதாகும.

ஏதாவது காரணத்தால் விமானப்பயணம் தடைபட்டால் நேரிடும் நட்டங்கள் பயணிகள் ஏற்றுக்கொள்ளவேண்டும்.

**29-9-'95 (வெள்ளி) காசியில் 10-ாம் நாள் ஓய்வு**

**30-9-95' (சனி) 11-ாம் நாள்**

அதிகாலை 5 மணிக்கு காசியிலிருந்து கிளம்பி அலகபாத் வழி அயோத்தியில் சென்று ஓய்வு.

கங்கை யமுனை ஆகிய நதிகளின் சங்கம ஸ்தாபனமாகிய த்ரிவேணியில் பலி கர்மாதிகள் நடத்தலாம். இரண்டு நதிகளும் சேருமிடத்திற்கு வள்ளத்தில் போகவேண்டும. அசோக சக்கரவர்த்தியின் காலத்தில் நிறுவிய ஒரு கோட்டை இதனருகாமையில் உண்டு. இன்று இங்கே போர் கருவிகள் செய்யும் தொழிற்சாலையுள்ளது. மேலும இங்கு ஒருகுகை கோயிலுமுண்டு. மோத்திலால் நேருவின் 'ஆனந்த பவன்' இவ்விடத்தில் இருக்கிறது.

**1-10-'95 (ஞாயிறு) 12-ாம் நாள்**

அயோத்தியிலுள்ள புண்ணியதலங்கள் பார்த்து அங்கேயே இரவு தங்கல்.

## அயோத்யா

சரயூ நதியில் நீராடி, அயோத்தி ஆலயங்களைத் தரிசித்தல்.

திரேதாயுகத்தில் அவதரித்த ஸ்ரீ ராமசந்திரரின் வாழ்க்கை வரலாற்றை வெளிப்படுத்தும் எண்ணற்ற பழையநிலையங்கள் அயோத்தியிலுள்ளன. தசரதனின் அரண்மனை, புத்திர காமேஷ்டி யாகம் நடந்த இடம், திருமணமான பிறகு சீதாதேவி தங்கி சமையல் செய்த இடம் கைகேயியின் கோபாலயம் மட்டுமல்ல. ஸ்ரீ ராமாயணத்துடன் தொடர்புள்ள பல நிகழ்ச்சிகளுடன் தொடர்புடைய பற்பல இடங்களையும் அயோத்தியாவில் காணலாம்.

## ஸ்ரீ ராமஜென்ம பூமி

பாரதத்தில் மிகப்பெரிய ஆலயம் இருந்தது ஸ்ரீ ராமஜென்ம பூமியிலாகும். மாற்றாரின் படையெடுப்பினால் இவ்வாலயம் தகர்க்கப்பெற்றது. சமீபத்தில் வாதவிஷயமான இந்த இடம் தற்போது இந்துக்களின் வழிபாட்டுத்தலமாக இருக்கிறது. ஸ்ரீராமன், சீதை, லட்சுமணன், அனுமன் ஆகியோரின் அழகிய சிலைகள் பார்த்துப் புண்ணியம் பெறுவதற்கு இந்தியாவின் பல திசைகளிலிருந்தும பக்தர்கள் தற்போது ராமஜென்ம பூமிக்கு தீர்த்தயாத்திரையாக வந்து போகின்றனர்

## வால்மீகி மந்திர்

கண் கவரும் இருமாடிக் கட்டிடம் குச லவர்களுடன் வால்மீகி மகரிஷி நிற்கும் சிலைதான் இங்கு பிரதிஷ்டிக்கப் பெற்றுள்ளது. சுவர்களில் முழுவதும் இராமாயண நிகழ்ச்சிகளின் சித்திரங்கள் செதுக்கப்பெற்றுள்ளன.

### கோபாலயம்

ஒரு பழைய மண்டபம் கைகேயி தங்கி இருந்த இடம். ஸ்ரீராமர் முடிசூட்டு விழாவைத் தடைசெய்து பரதனுக்கு முடிசூட்டுவதற்காக தசரதனை தூண்டுவதற்காக கைகேயி அழுது உருண்டு கிடந்த இடம்.

### ஆஞ்சநேயர் ஆலயம்

பக்த அனுமனின் அருள் ஒளிவீசுகின்ற அழகிய ஆலயம. ஸ்ரீராமர் கோயிலைப் போன்று இதற்கும் இங்கு சிறப்பு உண்டு.

அயோத்தியா நகரிலுள்ள மற்றும் பல புண்ணியத் தலங்களையும தரிசித்தல்.

**2—10—'95 (திங்கள்) 13-ாம் நாள்**

காலை 4 மணிக்கு அயோத்தியிலிருந்து கிளம்பி இரவு 8 மணிக்கு மதுரா சென்று ஓய்வு

**3—10—'95 (செவ்வாய்) 14-ாம் நாள்**

மதுராவை சுற்றியுள்ள கோவர்த்தனம் விருந்தாவனம், முதலியன தரிசித்த பின் ஆக்ரா தாஜ்மஹால் ஆகியவை பார்த்து மதுராவில் ஓய்வு

### கோவர்த்தனம்

ஸ்ரீகிருஷ்ண பகவான் குடையாகப் பிடித்த குன்று. அழகிய குன்றின்மேல் ஸ்ரீகிருஷ்ணர் ஆலயம் பார்க்கத் தகுந்ததாகும்.

**விருந்தாவனம்:**

ஸ்ரீ கிருஷ்ணன் கோபியர்களுடன் விளையாடிய புண்ணிய பூமி; ராசக்கிரீடை நடந்தது இங்கு தான். இங்கு இப்போது காணப்படும் மரஞ்செடி, கொடிகள் மிகவும் பழமை. ஸ்ரீ கிருஷ்ணன் தனது புல்லாங்குழலை ஊன்றிய இடத்தில் தற்போது சிறியதோர் குளமுண்டு கண்ணன் மண்ணைத்தின்ற இடமும் இங்குதான். இங்குள்ள மண்ணை பிரசாதமாக பக்தர்கள் கொண்டு செல்கிறார்கள்.

காளியமர்தனத்தை நினைவு படுத்தும் கடம்பு, மரமும், கோயில்களும் இப்போதும் இங்கே காணலாம். பக்த மீராவினுடையவும், ஹரிதாஸ் சுவாமிகளுடையவும் நினைவு ஆலயங்கள் இங்குண்டு.

விருந்தாவனத்தில் பல இடங்களிலும் அகண்டநாட ஜப ஓசை எப்போதும் கேட்ட-வண்ணமிருக்கும். பசுபரிபாலனச் சாலைகளும், அனாதை இல்லங்களும், ஆசிரமங்களும் ஏராளமாக விருந்தாவனத்திலுண்டு.

இங்கு கோவிந்தராஜன் கோயிலுள்ளது. முன்காலத்தில் இதற்கு ஐந்து மாடிகளிருந்ததாகக் கூறுவர் தற்போது இரண்டு மாடிகளே உள்ளன. யமுனைக்கரையிலுள்ள இந்தக்கோயிலில் மிக உன்னதமான இடத்திலுள்ள தீப ஒளியைக் கண்ட அக்பர் சக்கரவர்த்தி மனம் பெறாது மேலேயுள்ள மூன்று மாடிகளையும் இடித்துத் தள்ளினான்.

## மதுரா

ஸ்ரீ கிருஷ்ண பகவானது ஜன்மபூமி கம்சனது கோட்டையுர், ஸ்ரீ கிருஷ்ண பகவான் திரு அவதாரம் செய்த சிறைக்கூடமும் இன்றும் பாதுகாக்கப்படுகின்றன. இதற்கருகாமையிலேயே ஸ்ரீஜித் பிர்லாஜி கட்டிய ஸ்ரீ கிருஷ்ணர் கோயிலும் உள்ளது. இக்கோயிலினுள்ளே ராதாகிருஷ்ண மூர்த்திகள் புன்முறுவலுடன் திகழ்கிறார்கள். ஹனுமானுடையவும் மற்றும் பல தேவர்களுடைய-வும் சிலைகள் இங்கு வழிபடப்பெறுகின்றன.

'மது' என்ற அரக்கன் இந்நகரத்தை நிறுவினான் என உத்தர ராமாயணம் கூறுகிறது மதுவின் மகனான லவணாசுரனைக் கொன்று சத்ருக்கனன் இந்நகரை அதீனப் படுத்தினான். பின்னர் மகாபாரத காலத்தில் சூரசேனனது குலத்தவர் இங்கே அரசு செய்தனர். சூரசேன குலத்தின் ஒரு கிளையில் தான் பகவான் ஸ்ரீ கிருஷ்ணர் அவதரித்தது. மதுரா நகரத்திற்கு சூரசேனபுரம் என மகாபாரதம் கூறுகிறது.

கம்சன் மதுரையை ஆண்ட போது ஆந்திரர்களான மல்லனையும் சாணூரனையும் பின்னர் கம்சனையும் பகவான் கொன்றொடுக்-கியது இங்கு தான்.

அசோகர் இந்நகரை ஒரு பௌத்த நகரமாக மாற்றினார். பின் மௌரியர், யவனர், சகர் முதலியோர் இங்கு அரசு செய்தனர். கி.பி 1017-ல் முகம்மது கஜினி இந்நகரத்தைத் தகர்த்தான். அதைத் தொடர்ந்து இந்நகரம் பாழ்பட்டது.

## ஆக்ராகோட்டை

யமுனையின் கரையில் அக்பர் -இக் கோட்டையைக் கட்டினார். இதனுள்ளே அழகிய அரண்மனைகளும், பள்ளிவாசல்களுமுள்ளன. ஜஹாங்கீர் ஷாஜஹான் ஆகிய பேரரசர்கள் இங்கே வாழ்ந்திருந்தனர். நவரத்தினங்களும், தங்கத்தகடுகளும் பதித்திருந்த ஷாஜஹானது அரண்மனை இன்று நவரத்தினங்களையும், தங்கத்தையும் இழந்து பாழாகி கிடப்பதை பார்க்கலாம். ஆங்கில கொள்ளையர்களுடைய கைவரிசை அங்கே காணலாம். சிவாஜியை மொகலாயர்கள் சிறைபடுத்தியதும் இந்த ஆக்ரா கோட்டையில் தான்.

## தாஜ்மஹால்:

3653 -ல் மும்தாஜ் ராணியின் நினைவாக ஷாஜஹான் நிறுவியது.

## 4—10—'95 (புதன்) 15 -ாம் நாள்

மதுராவிலிருந்து காலை 5 மணிக்கு புறப்பட்டு ஹரித்வாரில் ஓய்வு.

## 5—10—'95 (வியாழன்) 16 -ாம் நாள்

ஹரித்வாரிலுள்ள திருக்கோயில்கள் தரிசனம் அன்றிரவு அங்கே தங்கல்.

## ஹரித்வார்

இமயமலைக்கு வாயிலாக திகழ்வது ஹரித்வார். பகவான் ஹரி நர நாராயணர்களாக அவதாரம் பண்ணி தவஞ் செய்ய பத்திரிக்குச் சென்றது இங்கிருந்து தான் எனவும் அதுவரை-யிலும் மாயாபுரி என்று அழைக்கப்பெற்றிருந்த அவ்விடம் அக்காலம் முதல் ஹரித்வார் என்ற பெயரில் அழைக்கப் பெற்றதென்றும் கூறுவர்.

புராணங்களில் மாயாபுரி என்று கூறப்படும் தலம் அல்லது நகரம் இதுவே.

உலகில் முதன் முதலாக பாகவத ஸப்தாஹம் நடந்த இடம் இது சுவேதகேது மகாராஜா பிரம்மனை தவம்புரிந்து தரிசனம் செய்த இடம் இது தட்சப்பிரஜாபதியை வதைத்த பின் சங்கார தாண்டவம் நடத்திய சிவபெருமானை பக்தர்கள் துதிப்பாடல்கள் பாடி சாந்தி அடையச் செய்து, பக்தர்களின் விருப்பத்திற்கிணங்க சிவபிரான் காட்சி கொடுத்ததும் இவ்விடமே எனக்கூறுவர் அங்ஙனம் இந்தப்புண்ணிய மண்ணிற்கு சிவபுரி என்ற பெயர் கிடைத்தது. பிரம்மா, விஷ்ணு மகேசுவரர்களின் திருப்பாதங்கள் பட்ட தெய்வத் தலமாகும். ஹரித்வார் கங்காநதி மலைப்பகுதியை விடுத்து அமைதியாக சமவெளியை அடைவது ஹரித்வாரில் தான் இங்கு பற்பல ஆசிரமங்களும் சத்திரம் சாவடிகளும் உள்ளன. நீராடும் படித்துறைகள் பலவும் உள்ளன 12 ஆண்டுகளுக்கொரு தடவை இங்கே கும்பமேளா நடக்கிறது அவ்வேளை பல லட்சம் மக்கள் தீர்த்த நீராடுவதற்காகக் கூடுவர்.

இங்கு ஒரு ஐயப்பன் ஆலயமிருக்கிறது. ஹரித்வாருக்கு வெளிநாடுகளிலிருந்தும் பக்தர்கள் வந்து போகிறார்கள்.

**ராம்தாம் தர்மசாலா:**

இது கங்கைக்கரையிலுள்ள தூய்மையான ஓராசிரமம். இங்கு தீர்த்தயாத்திரிகளான தாய்மார்களைக் கூட்டிவைத்து திருவிளக்குப்பூஜை நடைபெறும்.

**பிரம்ம குண்டு:**

மனிதரின் வீடுபேற்றிற்காக கங்காநதியில் பிரம்மதேவன் அமிர்தம் பொழிந்த இடம் இது. நீராடுதல், பாத்திரங்களில் தீர்த்த ஜலம் நிறைத்தல் முதலியன இங்கு நடைபெறும். இங்குள்ள கங்காதேவி கோவிலில் கற்பூர ஆராதி களிந்த உடன், கங்கா நதியையும் பெரிய அளவில் கற்பூர ஆராதி எடுத்து பூஜை செய்வர். இது இங்கல்லாமல் வேறெங்குமே இல்லை.

மாலை வேளையில் பக்தர்கள் இலைத் தொன்னைகளில் மலர்களும், சிறு தீபங்களும் வைத்து கங்கா நதியில ஒழுகவிடுவது கண் கொள்ளாததோர் தீப காட்சியாகும்.

**மானஸா தேவி கோவில்**

'சிவாலி பஹாட்' என்றழைக்கப்படும் மலை மேலுள்ளது இக்கோவில் மிக எளிதாக "ரோப்வே" வழி இங்கே சென்று சேரலாம. சிவன், துர்க்கை மூர்த்திகளின் கோவில் குன்றிலிருந்து காணும் இயற்கைக் காட்சி மிகவும் அற்புதம்

**ஸப்தஸரோவரம்:**

கங்காநதி ஏழு கிளைகளாகப் பிரிந்து ஒழுகுகின்ற இடம் இது. ஸப்தரிஷிகள் (7பேர்) தவஞ்செய்திருந்த ஆசிரமங்களின் அருகாமை வழி மகரிஷிமார்களின் விருப்பத்திற்கிணங்க கங்கை ஆறு ஏழாகப் பிரிந்து ஒழுகியது கொஞ்ச தூரம் சென்ற பின் அவைகள் ஒன்றாகக் கூடுகின்றன. அந்த ஸப்தஸரோவரக் காட்சியை இப்போதும் அங்கே காணலாம்.

**கங்கல்:**

பிரம்ம புத்திரனாகிய தக்ஷப்ரஜாபதியின் தலைநகர் கங்கல் என்ற இடத்திலிருந்து தக்ஷனின் மகளாகிய சதீ தனது தந்தையின் வெறுப்பினால் மனம் நொந்து. யோகாக்னியில் தன்னைத்தானே எரித்துக்கொண்டது கங்கலில் தான் மனைவியான சதீயின் முடிவை அறிந்த சிவபெருமான் சங்கார தாண்டவம் நடத்தியதும இங்குதான் என்று கூறுவர்.

துறவிகளின் உடலை ஜலசமாதி செய்வதும் இங்குதான் சற்குருதேவர் அம்பதானந்த மஹராஜ் இங்கேதான் ஜலசமாதி கொண்டார் இந்த யாத்திரையில் கலந்து கொள்பவர் இங்கு நடைபெறும் அர்ச்சனை அகண்டநாம ஜெபம ஆகியவைகளில் பங்கு கொண்டு இங்கு சமாதி அடைந்த புண்ணியாத்மாக்களுக்கு அஞ்சலி செய்யுமாறு வேண்டுகிறோம்.

6—10—'95 (வெள்ளி) 17-ாம் நாள்

காலை 6 மணிக்கு ஹரித்வாரிலிருந்து புறப்பட்டு ரிஷீகேசம் சென்று சேர்தல் ரிஷீகேசம், பாரத்மாதா கோவில், சப்தர்ஷி ஆசிரமம், முதலியவை பார்த்து ஹரித்வார் சென்று ஓய்வு.

**ரிஷீகேசம்**

ரிஷீகேசம் இமயமலை சாரலிலுள்ள மிகப்பழமையான புண்ணியத்தலம் அத்ரி, அங்கிரஸ் முதலிய பல மாமுனிவர்களின் பாததுளியால் பரிசுத்தமான இடம்.

ரிஷிமுனிவர்களின் தவச்சாலையான இத் தலத்தில் தற்காலத்திலும் பல தவயோகிகள் தவஞ்செய்து வருகிறார்கள். ஏராளம் அன்ன சத்திரங்கள் இங்குள்ளன அவைகளில் துறவி களுக்கு அன்னதானமும் தங்குமிடமும் அளிக்கின்றார்கள்.

**சிவானந்தாசிரமம்:**

கங்கை நதிக்கரையில் 1946-ல் சுவாமி சிவானந்தசரசுவதி நிறுவியது அகிலஉலக புகழ்பெற்ற தியான யோக நிலயமாக இன்று இது விளங்குகிறது இந்த ஆசிரமத்திற்கு உத்தமர்களான பல துறவிப்பெரியோர்களை உருவாக்க முடிந்தது உலகப்புகழ் கொண்ட ஞானானந்த சரஸ்வதி, சின்மயானந்த சரஸ்வதி, விஷ்ணுதேவானந்தசுவாமி (பறக்கும் சுவாமி) ஆகியோர் சுவாமி சிவானந்த சரசுவதியின் சீடர்களாவர்

திருநெல்வேலியில் பத்துமடை ஊரில் பிறந்தவர் சிவானந்தசரசுவதி அவர் ரிஷீகேசத்தில் சமாதி அடைந்தார். அவரது சமாதி கோவிலில் தினமும் பஜனை நடந்துவருகின்றன.

**தயானந்தாசிரமம்:**

தயானந்த சரஸ்வதி சுவாமி நிறுவிய ஆசிரமம் இது. நான்குமாடி உள்ள இந்த கட்டிடத்தின் மிக உயர்ந்த மாடியில் சுவாமி அபேதானந்தரின் திருஉருவப்படம் வைக்கப்பட்டு அகண்ட நாம ஜெபமும் நடைபெறுகிறது.

## சொர்க்காஸ்ரமம்:

சிவானந்தாசிரமத்தின் நேர் எதிராக கங்கைக்கரையில் உள்ள ஓர் ஆசிரமம் இது. சிவானந்தாசிரமத்திலிருந்து மறுகரை செல்வதற்காக "சிவானந்தாபிரிட்ஜ்" என்ற ஓர் தூக்கு பாலம் இப்பொழுது அமைத்துள்ளனர்.

## காளி கம்ளிவாலா க்ஷேத்ரம்:

சுவாமி காளிகம்ளிவாலா என்று புகழ்பெற்ற சுவாமி விசுத்தானந்தர் என்ற மகான் இந்த அன்ன சத்திரத்தை நிறுவினார் எப்போதும ஓர் கடுமையான கம்பிளி போர்த்திக்கொண்டு இவர் நடமாடியதால் இவருக்கு காளிகம்ளிவாலா என்று பெயர் ஏற்பட்டது. தீர்த்த யாத்திரிகளின தொண்டனாகவும், பாதுகாவலனாகவும இந்த மகான் செயல்பட்டு வந்தார். யாத்திரை வசதியும் ஜாகை வசதியும் குறைவாக இருந்த முற்காலத்தில் இந்த சத்திரத்தில் இலவசமாக தீர்த்த யாத்திரிகள் தங்கியிருந்தார்கள். ஏழைகளான யாத்திரிகளுக்கு கம்பிளி முதலானவைகள் கொடுத்தார் ரிஷீ கேசத்தில் மட்டுமல்ல இமயமலையின் பல இடங்களில் காளி கம்ளிவாலா சத்திரங்கள் நிறுவப்பட்டுள்ளன அவரது சமாதிக்குப் பிறகு எல்லா சத்திரங்களையும் ஒன்று சேர்த்து காளிகம்ளிவாலா டிரஸ்ட் உண்டு பண்ணி உள்ளனர். இன்று அதற்கு கோடிக்கணக்கான ஆஸ்தி இருக்கிறது. இந்த டிரஸ்டிலிருந்து சத்திரங்கள் மருத்துவமனைகள் முதலியன நன்றாக செயல்பட்டு வருகின்றன தினமும்

நூற்றுக்கணக்கான துறவிகளுக்கு காளிகம்ளி வாலா ஆசிரமத்திலிருந்து இலவச உணவு அளிக்கப்படுகிறது.

**பரமார்த்த பவன்**

தேவி தேவர்களுடைய அழகிய சிலைகளும் ரிஷிமுனிவர்களின் திரு உருவங்கள் அமைக்கப் பட்டுள்ள ஓர் அழகிய நிலையம் இது. அனந்த சயனம், லட்சுமி நாராயணர், ஐந்து முக சிவன் கணபதி, சரஸ்வதி, துர்க்கை, விராட்புருஷன், வெங்கடாசலபதி, கபிலர், நாரதர் முதலியோர்களது சிலைகள் அற்புதமாக இருக்கின்றன. பார்வதி சிவனை நோக்கித்தவம் செய்வது சாவித்ரி எமதர்மனிடம் சத்தியவான் உயிரைக் கேட்டு வாங்குவது. நரசிம்ம மூர்த்தி இரணியகசிபுவை மடியில் கிடத்தி குடலை பிடுங்குவது, அனுசுயா தேவி மும்மூர்த்திகளைக் குழந்தைகளாக மாற்றி பால் கொடுப்பது, சபரிமோட்சம் முதலிய கலை வடிவங்களும் காணத் தக்கவையாகும்.

**கீதா பவன்**

கீதை உபதேசம் முழுவதும், கலைத்திறன் வாய்ந்த சிற்பவடிவங்களாக விளங்கியிருக்கும் புண்ணிய கோவில். பாகவதக்கதைகளும் சித்திரங்களாக்கப் பெற்றுள்ளன.

**பாரத மாதா க்ஷேத்திரம்**

180 அடி உயரத்தில் 8 மாடிகளாக கட்டப் பெற்றுள்ள ஓரழகிய மண்டபம். பாரதமாதாவின் ஒரு அழகிய சிலை இங்கு நிறுவப்பெற்றுள்ளது. ஒவ்வொரு மாடியிலும், பாரதீய ஆச்சாரியர் களுடையவும், துறவிகளுடையவும் சிலைகள் வைக்கப்பெற்றுள்ளன ஒவ்வொரு மாடிக்கும் ஒவ்வொரு தனிப்பெயர் சூட்டப்பெற்றுள்ளது.

சுவாமி சத்ய மித்திரானந்தகிரி மஹராஜ் தான் இதை நியமித்தவர். சலவைக்கற்களால் கட்டப் பெற்றுள்ள இக்கோயிலை 1983, மே 13-ாம் தேதி திருமதி. இந்திராகாந்தி திறந்து வைத்தார்.

**ஸப்தர்ஷி ஆசிரமம்**

ஒரு சிவாலயம், அதைச்சுற்றி அழகிய மண்டபம். மண்டபத்தில், ஜமதக்னி, பரத்வாஜன் கௌதமன், கசியபவன் அத்ரி, வசிஷ்டன், விசுவாமித்திரன் ஆகிய ஸப்தர்ஷிகளின் சிலைகள் நிறுவப்பெற்று உள்ளன. ஸப்தர்ஷிகள் முன்னாளில் செய்த வேள்வியின் தீ இன்றும எரிந்துகொண்டிருக்கிறது

ரத்னாகரன் என்ற கொள்ளைக்காரனுக்கு ஸப்தர்ஷிகள் உபதேசம செய்து ஆன்மஞானம அளித்ததும் அக்கொள்ளைக்காரன் ராம நாம ஜப மகிமையால் வால்மீகி மகரிஷி ஆனதும இவ்விடத்தில் தான்.

7—10—95 (சனி) 13-ாம் நாள்

---

காலை 5 மணிக்கு ஹரித்வாரிலிருந்து புறப்படுதல். தேவப்ராயக், ஸ்ரீநகர், குப்தகாசி, ருத்திரப்ரயாகை வழி ராம்பூரில் சென்று சேர்தல்.

**தேவப்பிரயாகை**

கங்கை நதியின் உபநதிகளாகிய அளகானந்தையும் பாகீரதியும் ஒன்று சேர்கின்ற இடம்.

**ஸ்ரீ நகர்**

இமயமலை யாத்திரை செய்வோர் ஓய்வுக்காகத் தங்கிச் செல்லுமிடம்.

**உத்ரப்பிரயாகை:**

பத்திரிநாதத்திலிருந்து வரும் அளகானந்தையும் கேதாரநாதத்திலிருந்து வரும் மந்தாக்கினியும் ஒன்று கலக்குமிடம் ருதரபகவான் தவஞ்செய்த இடம இங்கொரு சிவாலயமுமுள்ளது துர்காதேவி கோவிலுமுண்டு.

மந்தாக்கினியின் கரை வழியாக கேதார்நாதத்திற்கும் அளகானந்தையின் கரைவழியாக பத்ரீநாதத்திற்கும உள்ள பாதைகள் இங்கிருந்து பிரிந்து செல்கின்றன.

**குப்தகாசி:**

1479 மீட்டர் உயரத்திலுள்ள ஒரு கிராமம் குருக்ஷேத்ரப் போருக்குப் பிறகு பாண்டவர்கள் காசி விசுவநாதரை தரிசிக்கச் சென்ற போது அவர் பாண்டவர்களுக்குக் காட்சிக்கொடுக்க மனமின்றி மறைந்திருந்த இடமென இதனை கூறுகின்றனர்.

**ராம்பூர்:**

கேதார்நாதத்திற்கு போவோரும் போய்த்திரும்புவோரும இரவு தங்குமிடம்

8—10—1995 (ஞாயிறு) 19-ாம் நாள்

அதிகாலை 5 மணிக்கு ராம்பூரிலிருந்து கிளம்பி கௌரிகுண்ட் வழி கேதார்நாதத்தையடைந்து தரிசித்துவிட்டு திரும்பி மாலை 6 மணக்கு ராம்பூருக்கு வருகிறார்கள்.

**கௌரிகுண்ட்:**

கேதார்நாத் சிகரத்தின் அடிவாரத்தில் இயற்கையாகத் தோன்றியுள்ள வெந்நீர் ஊற்றுள்ள இடம் கந்தகம் கலந்த இந்த வென்னீரில் குளிப்பது யாத்திரிகளுக்கு மிகுந்த பயன் தருவதாகும்.

**கேதார்நாத்:**

12000 அடி உயரமுள்ள கேதார்நாதத்தில் சென்று சேர்வது சிறிய கஷ்டமாகும் கௌரிகுண்டிலிருந்து 14 கி.மீ. நடந்து அல்லது குதிரை சவாரி செய்து மட்டுமே கேதார்நாதத்திற்கு செல்ல முடியும். டோளியில் (தொட்டில் போன்றது) உட்கார்ந்து செல்லலாம்.

பனிமுடிய சிகரங்களால் சூழப்பெற்றதும் விண்ணுலகக் காட்சியைத் தந்து கொண்டிருப்பதுமான கேதார்நாத் தரிசனம் பேரின்பத்தை அளிப்பதாம்.

கேதார்நாத் சிவலிங்கம் சுயம்புவாகும். பஞ்சபாண்டவர்களால் வழிபடப் பெற்றது காசியைப்போல் இங்கும் எல்லோரும் மூர்த்தியைத் தொட்டுப் பூஜைகள் செய்யலாம்.

ஜகத்குரு ஆதிசங்கராச்சாரியாருடைய மகாசமாதி இங்கே தான் என்று கூறப்படுகிறது. அவர்கள் நினைவாக ஒரு கோவில் இங்கே உள்ளது.

## 9 – 10 – 1995 (திங்கள்) 20-ஆம் நாள்

அதிகாலை 5 மணிக்கு ராம்பூரிலிருந்து பத்ரிநாதத்திற்குத் திரும்புதல் ருத்திரப்பிரயாகை வழி கர்ணப்பிரயாகை, நந்தப்பிரயாகை சாமோலி பீப்பல்கோட், விஷ்ணுப்பிரயாகை, பாண்டுகேசுவர் என்ற இடங்களைக்கடந்து மாலை 6 மணிக்கு பத்ரிநாதம சேர்தல். ஓய்வு.

## 10 — 10 — 1995 (செவ்வாய்) 21-ஆம்நாள்

பத்ரிநாதம தரிசனம். இவ்வாலயம பாரதத்தின் வடகோடி எல்லைப் புறத்திலிருப்பதாம்.

இங்கிருந்து 30 கி மீ. வடக்கே பாரதத்தின் எல்லைக்கோடு உள்ளது. இது பண்டைக்காலம் முதற்கொண்டே எண்ணற்ற யோகிகளும், முனிவர்களும் வாழும் தபோபூமியாகும்.

### வியாஸகுகை

பத்ரிநாதன் கோயிலுக்கு வடக்கே 6 கி.மீ. தொலைவிலுள்ள வியாஸகுகையில் வாழ்ந்து கொண்டு வேதவியாஸ பகவான் மகாபாரதம் முதலிய நூல்களை எழுதியதாகக் கூறுவர்.

பாண்டவர்கள் சொர்க்காரோகணம் செய்ததும் இங்கே தான். நர நாராயண ரிஷிகளால் இவ்விடம் பாதுகாக்கப்படுகிறது. அவர்கள் பெயரில் ஆலயத்தின் இருபுறமும் நரபர்வதமும் நாராயண பர்வதமுமாக இரண்டு மலைகள் உள்ளன.

ஆதிசங்கரர் சுமார் 1200 ஆண்டுகளுக்கு முன் இக்கோயிலை புனர் பிரதிஷ்டை பண்ணி கேரளத்திலுள்ள நம்பூதிரிமார்களை இங்கு பூஜாரிகளாக்கினார். அவர்களின் பரம்பரையினர் தான் தற்போதும் இவ்வாலயத்தில் பூஜை செய்பவர்கள் தலைமைப்பூஜாரி ராவல்ஜீ என்று அழைக்கப்படுகிறார்.

இக்கோயிலுக்கு அருகாமையில் உஷ்ணஜல ஊற்று பூமிக்குள்ளிருந்து மிகவேகமாக ஊறி ஓடுகிறது. அதனை மூன்று குண்டுகளில் தேக்கி வைத்துள்ளனர். அவைகளுக்கு தப்தகுண்டம் என்று பெயர்.

"பூலோக வைகுண்டம்" எனப்படும் பத்ரிநாதத்தில்தான் கண்ணபிரானது ஆணைக்கு இணங்க உத்தவர் இறுதிநாட்களில் தவம் செய்திருந்தார். இங்கு தங்கி தவஞ்செய்வோர் முக்தி அடைவது உறுதி கேரள முறையில் இங்கேயுள்ள பூஜைகள் நடைபெறுகின்றன.

இங்குள்ள கங்கைக்கரையில் பலி தர்ப்பணாதிகள் நடத்துவதால் 21 தலைமுறைகளிலுள்ள பித்ருக்களும முக்தி அடைவர் என நம்பப்படுகிறது. பத்ரிநாத கோவிலில் வைத்து பெண்கள் மட்டும் கலந்து கொள்ளும் திருவிளக்கு பூஜை நடைபெறும.

## 11—10—1995 (புதன்) 22-ாம் நாள்

அதிகாலை 6 மணிக்கு பத்ரிநாதத்திலிருந்து புறப்பட்டு ஜோதிர்மடம் வழி ஸ்ரீ நகரை அடைந்து ஓய்வு. வருகிற வழியிலுள்ள ஆஞ்சநேயர் ஆலயத்திலிறங்கி தரிசனம் செய்தல் இவ்வாலயத்-

தின் அருகாமையில்தான் முற்காலத்தில் செளகந்திகப் (பாரிஜாதம்) பூவைத்தேடிச்சென்ற பீமனை அனுமான் தடுத்து பல பரீட்சை நடத்தினார் எனக்கூறுவர்.

**ஜோதிர்மடம்**

பகவான் ஆதிசங்கரர் நிறுவிய முதல் மடம் இது. துர்க்கா ஆலயமும் இங்குள்ளன ஸ்ரீ பத்ரிநாதர் ஆலயம் பனிக்கட்டியால் மூடப்படும் போது அங்குள்ள பூஜை இந்த நரசிம்மர் ஆலயத்தில் நடைபெறுகிறது.

**12—10—'95 (வியாழன்) 23-ம் நாள்**

காலை 6 மணிக்கு ஸ்ரீநகரிலிருந்து புறப்படுதல். வழியில் வசிஷ்ட குகை தரிசனம் பண்ணி மாலை ஹரித்வாரத்தை அடைந்து ஓய்வு.

**13—10—'95 (வெள்ளி) 24-ாம் நாள்**

காலை 6 மணிக்கு புறப்பட்டு டெல்லி வந்து டெல்லி பர்சசிங் பார்த்து ஓய்வு.

**14-10-1995 (சனி) 25-ாம் நாள்**

டெல்லி காட்சிகள் ஓய்வு.

காலை 6 மணி முதல் சுற்றுலா ஆரம்பம் பிர்லா மந்திர், குதுப்மினார், தீன்மூர்த்தி பவன், இந்தியகேட், பார்லிமெண்டரி கட்டிடம, பிர்லா பவன், இந்திராகாந்தி மியூசியம், ராஜ்கட், சாந்தி வனம், செங்கோட்டை, லோட்டஸ் டெம்பிள் ஆகியவை பார்த்து மாலையில் டெல்லி ஓய்வு.

**பிர்லாமந்திர்**

மார்பிளினால் செய்யப்பட்ட அழகான பேராலயம் இது. ஸ்ரீ J.K. பிர்லாஜி தான் இதைக் கட்டியவர். கோயிலின் முக்கிய மூர்த்தி லக்ஷ்மி நாராயணன். இதன் இடது பக்கம சிவலிங்க பிரதிஷ்டை, வலது பக்கத்தில் துர்க்காதேவி. ஒரு

கண்ணாடி அறையில் முரளீ கிருஷ்ணமூர்த்தியின் சிலை உள்ளது. எந்தபக்கத்திலிருந்து பார்த்தாலும் கண்ணுக்கு விருந்தாக அது மிளிர்கிறது.

## குதுப்மினார்

பதிமூன்றாவது நூற்றாண்டில் நிறுவப்பெற்றதும் இன்றைய இந்தியாவில் உற்ள மிக உயர்ந்ததுமாகிய ஸ்தூபி, ஐந்து மாடிகளும், 379 படிகளும் உள்ள இந்த ஸ்தூபியின் உயரம் 236 அடி 8 இஞ்ச்.

## தீன்மூர்த்தி பவன்

ஜவஹர்லால் நேரு தங்கியிருந்த மாளிகை இப்போது நேரு மியூசியமாக பயன்படுத்தி வருகிறார்கள்.

## இந்தியா கேட்

ஒன்றாவது உலகப்பெரும் போரில் கொலையுண்ட தொண்ணூறாயிரம் (90,000) இந்தியப்படைவீரர்களின் நினைவாக நிறுவப் பெற்ற வளைவு ஆகும்.

## பார்லிமெண்டரி கட்டிடம்

171 மீட்டர் விட்டத்தில், வட்டமாக நிறுவப்பெற்ற அழகிய மண்டபம்.

## பிர்லா பவன்

இங்குதான் காந்தியடிகள் கடைசி காலத்தில் வாழ்ந்ததும், சுட்டு வீழ்த்தப்பட்டதும், காந்திஜி-

யின் வாழ்வை விளக்கும் பொருட்காட்சி சாலையாக இது இருக்கிறது.

**இந்திராகாந்தி மியூசியம்**

இந்திராகாந்தி வாழ்ந்திருந்த பவனம் இந்திராகாந்தி இறந்ததும் இங்கேதான். இன்று இது தேசிய மியூசியமாக இருக்கிறது.

**ராஜ்காட்**

மகாத்மா காந்தியின் சமாதி ஸ்தானம். கறுத்த சலவைக்கல்லால் சதுரமாக கட்டப்பெற்ற ஒரு பீடமும் அதைச்சுற்றி ஒரு பூந்தோட்டமும் இங்கே உள்ளது.

**சாந்தி வனம்**

ஜவஹர்லால் நேருவின் சமாதி இடம்

**செங்கோட்டை:**

சிவந்த கற்களை கொண்டு கட்டப்பெற்ற மனோகரமான கோட்டை, 1638 -ம் ஆண்டு யமுனா நதிக்கரையில் கட்டப்பெற்ற இந்த கோட்டைக்கும் இரண்டு கி. மீ. சுற்றளவு உண்டு வரலாற்று முக்கியத்துவம வாய்ந்த இந்த செங்கோட்டையில் தான் இந்திய பிரதமர்கள் சுதந்திர தினத்தன்று அறிவுரை வழங்குவது, கோட்டையினுள் மொகலாய பேரரசர்களின் அனேக அரண்மனைகள் உண்டு.

**லோட்டஸ் டெம்பிள்**

பாரதத்தில் வகாய் இயக்கத்தின் தலைமை-யகம். வெளியே சற்று தொலைவில் நின்று பார்த்தால் வெள்ளை தாமரைப்பூவின் உருவமாக தெரியும். பிரார்த்தனை மண்டபம் பளிங்கு கற்-களால் மிகவும் கண்ணிற்கு இனிமையாக உருவாக்கியிருக்கிறார்கள். மத வேற்றுமையின்றி எல்லா மனிதர்களுக்கும் இங்கு நடக்கும் பிரார்த்த னையில் பங்கு கொள்ளலாம். ஆனால் பிரார்த்தனா சப்தம் வெளியே கேட்க கூடாது.

**15—10—'95 (ஞாயிறு) 26-ஆம் நாள்**

மதியம் 11 மணிக்கு திருவனந்தபுரத்திற்குள்ள K.K. எக்ஸ்பிரஸில் திரும்பி வருதல்.

**16—10—'95 (திங்கள்) 27-ஆம் நாள்**

ரயில் பயணம்

**17—10—'95 (திங்கள்) 28-ஆம் நாள்**

மாலை 4·45-க்கு ரயில்வழி திருவனந்தபுரம் வந்து சேர்தல்.

சுபம்

**தீர்த்தயாத்திரிகள் தெரிந்துகொள்ள வேண்டிய விஷயங்கள்:**

1) காசி-ஹிமாலய தீர்த்தயாத்திரையில் பங்கு கொள்வோர் 1995 செப்டம்பர் 20-ஆம் திபதி புதன் மாலை 4 மணிக்கு Cochin Howra எக்ஸ்பிரஸில் கொச்சியிலிருந்து புறப்படுகின்றனர்.

2) போகி, பெட்டிநம்பர், சீட்நம்பர் என்பவைகளை பயண நாளுக்கு முன்னதாகவே பயணிகளைத் தெரிவிப்போம். திருவனந்தபுரத்திற்கும் கொச்சிக்கும் இடைப்பட்ட இடத்திலிருந்து வரும் பயணிகள் 20-9-'95 காலை 9-40 க்கு K K. எக்ஸ்பிரஸ் (Connection train) -ல் எர்ணாகுளத்திற்கு செல்கிறார்கள்.

3) பிற ரயில் நிலையங்களிலிருந்து பயணம் தொடங்கவிரும்பும் பயணிகள், ஏது ரயில்வே ஸ்டேஷனிலிருந்து ஏறுவோம் என்ற விவரம் முன்னதாகவே தெரிவிக்க வேண்டும். 1 மணிசகு முன்னதாக பயணிகள் ரயில் நிலையம் வந்து சேரவேண்டும்.

4) பயணிகள் தங்கள் முகவரியை (முழுப் பெயர், வீட்டுப்பெயர், கிராமம், தாலுகா, ஜில்லா) வயது ஆகியவைகளை முன்னதாகவே தெரிவிக்க வேண்டும்.

5) மிக நெருங்கிய ஒரு உறவினரின் முகவரி கூட தெரிவிக்க வேண்டும். (போண் நம்பர் இருக்குமாயின் அதுவும)

6) தீர்த்த யாத்திரை வேளையில் மஞ்சள் நிறம் ஆடைகள் அணிந்து வருதல் நலம்.

7) யாத்திரை வேளையில் தங்க நகைகள் கட்டாயமாக அணியக்கூடாது.

8) உணவு, ஜாகை, ஆகியவைகளுக்கான காசி-ஹிமாலய யாத்திரைக்கு, 7600/- ரூபாயும் தரல் வேண்டும
மெயர் பதிவுசெய்யும் போது ரூ3000/- முன் பணமும் மீதி பயணம கிளப்புவதற்கு ஒரு மாதம் முன்னரும செலுத்த வேண்டும
பெயர் பதிவு செய்யும்போதே முழுப்பணமும் செலுத்துவது மிக நல்லது

9) 'டிராப்ட்', அனுப்புவோர் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்ப வேண்டும்

**சுவாமி அம்பிகானந்தா,**
ஸ்ரீ சாரதாமந்திர், பார்வதிபுரம்,
வெட்டூர்ணிமடம்-P O
நாகர்கோவில் 629 003
கன்னியாகுமரி மாவட்டம்

10) தீர்த்தயாத்திரைக்குள்ள DD எடுக்கும்போது Swami Ambikanandaji StateBank of Travancore என்று எடுத்து அனுப்பவும்

11) யாத்திரைக்குப் பெயர் பதிவு செய்த பின்னர் வரமுடியாதவர்களுக்குப் பணம் திருப்பித்தரப் படமாட்டாது ஆனால் யாத்திரை கிளம்பு வதற்குப் பதினைந்து நாட்கள் முன்னதாக வேறொருவரை தனக்கு பதிலாக அனுப்பலாம் ஆனால் ரயில் பொட்டியில் படுக்கை ஒரு வேளை தான் கிடைக்கும் இந்தக் குறிப்பிட்ட நாள் கழிந்து விட்டால் இதுவும் முடியாது

12) கௌரிகுண்டத்திலிருந்து கேதார்நாதம் வரையிலுமுள்ள 14 கிமீ தூரம் குதிரைகளிலோ டோளியிலோ ஏறிப்போக வேண்டும் யாத்திரிகள் ஒரு சங்கமாக செல்வதால் கால் நடையாத்திரை இயலாது அது அனுமதிக்க முடியாது குதிரை சவாரிக்கு ரூ 300/- டோளிக்கு ரூ 850/- ம் கொடுக்க வேண்டும் அந்தச்செலவை பயணிகளே கொடுக்க வேண்டும் பயண வேளையில் டிக்கட் வாங்கிக் காணவேண்டிய பொருட்காட்சி சாலை முதலிய இடங்களுக்கான செலவும் பயணிகளே செய்ய வேண்டும்

ஹரித்வாரில் கங்கைக்கரையிலுள்ள சில ஆசிரம இடங்களுக்கு பஸ் செல்ல முடியாததால் அங்கு செல்வதற்கான ஆட்டோ செலவும் பயணிகளே செய்ய வேண்டும

நேப்பாளம் போய் வர விரும்பும் பயணிகள் விமான டிக்கட்டுக்கான ரூபாய் 2000/- முன் பணத்துடனோ அல்லது பயணம் தொடங்குவதற்கு இரண்டு மாதங்கள் முன்னமே கண்டிப்பாக செலுத்தியாக வேண்டும் ஒரு வழிகாட்டியின் செலவும அங்குள்ள எல்லா செலவுகளும் அவரவர்களே செய்ய வேண்டும

13) பயணம் இன்பமாய் அமைவதற்கு மூட்டைகள் மிகவும் குறைவாகவே கொண்டுவர வேண்டும ஒரு நபர் 20 கிலோ பளுவிற்கு மேல் சாமான்கள் கொண்டு வருதல் கூடாது இது அவசியம் கையாள வேண்டிய விதிமுறையாகும்

ஒரு தலையணை, கம்பிளி அல்லது பெட்சிட்ஒரு போர்வை இவைஒருமடக்குபாயில்வைத்துசுருட்டி ரெஸ்கின் அல்லது பாலித்தீன் பேப்பரிலோ பொதிந்து பிள்ாஸ்ட்டிக் சரடால் கட்டி வைக்க வேண்டும (இம்முறையில் செய்யவில்லையானால் பயண வேளையில் படுக்கை வண்டியின் மேலே போடும் போது மழையோ அல்லது பனியோ விழுந்தால்நனைந்துவிட இடையாகும்) நனைந்து விட்டால் படுப்பதற்கு கஷ்டம என நீங்கள் அறிந்ததே.

14) இரயில் பயணம் செய்யும் வேளையில் ரெயிலின் உள்ளே வைத்து உணவு தயார் செய்ய முடியாததினால் ரெயில் பயண வேளையில் ஆகும் உணவு செலவு அவரவர் செய்ய வேண்டியதாகும்.

## உணவு வகை

15) காலையில் கருப்பட்டி, சுக்கு, நல்லமிளகு இவைகளால் தயாரிக்கப்பட்ட சுக்குகாப்பி (பயண வேளையில் பயணிகளுக்கு ஏற்படும் சிறுநோய்களுக்கு இது ஒரு மருந்து ஆகும்) 8 மணிக்கு இட்லி, உப்புமா, பிட்டு, சப்பாத்தி பறோட்டா இவற்றுக்கான கறிகளுடன் மாறி மாறி கொடுக்கப்படும். மதியம் பயணவேளை யாக இருந்தால் தயிர்சாதம், சாம்பார்சாதம், புளிசாதம, லெமென்சாதம் இவைகளில் ஏதா வது ஒன்று கொடுக்கப்படும். தங்குமிடமாக இருந்தால் கறிகளுடன்கூடிய சாப்பாடு. இரவு கஞ்சியும் அதற்கான கூட்டுகளும. பயண வேளையில் பயணிகளுக்கு கொடுக்கப்படும் உணவு மேற்கூறியவாறு அமையும.

16) ஊறுகாய்கள் வேண்டுவோர் அவர்களே கொண்டும் வரலாம். (எங்களிடமும் சிலவகை ஊறுகாய்கள் இருக்கும)

17) பயணவேளையில் பச்சைத்தண்ணீர் குடிக்கக் கூடாது. இரயில் பயணம் முடிந்ததும் பயணி களுக்கு குடிப்பதற்கு வென்னீர் கொடுக்கப் படும்.

18) பயண வேளையில் பெரும்பாலும் தங்குவது ஆஸ்ரமங்களிலும், தர்மஸ்தலங்களிலும் ஆகும பெண்களுக்கும, ஆண்களுக்கும் தனித்தனி இடங்கள் கொடுக்கப்படும். இதை விருமபாத வர்களுக்கு அவர்களது செலவில் தங்குவதற்கு முறிகள் எடுக்க வேண்டுமென்றால் அதற்கான ஏற்பாடுகள் செய்து கொடுக்கப்படும.

19) பயணிகள் எடுத்து வரவேண்டிய பொருள்கள்-:

i) உணவுத்தட்டு-1 கூட்டுவைக்க சிறியதட்டு-2, கரண்டி-1, கப்பு-1, மக் (குவளை)-1, தண்ணீர் பாட்டில்-1, பிளாஸ்க்-1 மெழுகு-வத்தி தோள்பை.

ii) மிதமான அளவில் படுக்கை.

iii) ஸ்வெற்றர், மப்ளர், ஸோகஸ் (காலுறை) கேன்வாஸ் ஷு கையுறை

iv) டார்ச்லைட், தேவையான மருந்துகள், மழைக்கோட்டு ஆகியவை அவசியம் வேண்டும். சொட்டர்கள், மப்ளர்கள் முதலிய கம்பிளி சாதனங்கள் ஹரித்வாரில் குறைந்த விலையில் கிடைக்கும் என்பதை நினைவில் கொள்க.

v) பயணத்தில் பங்குபெறும் தாய்மார்கள், எல்லோரும் திருவிளக்குப் பூஜை செய்வதற்கு வசதியாக ஒரு சிறிய குத்துவிளக்கும் கூட கொண்டுவர வேண்டும்.

20) இது மிகவும் பெரியதொரு புனிதபயணம் ஆதலால் நேரம் தவறாமை பயணிகளுக் கிடையே கூட்டுறவு இவை ஒன்றுபட்டு இருந்தாலே இப்பயணம் முழு வெற்றியை பெறும் என்பதை பயணிகள் உணர்ந்து கொள்ள வேண்டும்.

21) கூடுதல் விவரங்கள் அறிய விரும்புவோர் கடிதம் மூலமோ நேரடியாகவோ தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி:-

சுவாமி அம்பிகானந்தா,
ஸ்ரீ சாரதாமந்திர், பார்வதிபுரம்,
வெட்டூர்ணிமடம்-P.O.
நாகர்கோவில்-629 003
கன்னியாகுமரி மாவட்டம்.

இவண்,
**எஸ். கிருஷ்ணன் நாயர்**
கன்வீனர்.
**Ph: 84369**
**STD.Code: 04651**

குறிப்பு:- எல்லாவருடமும் செப்டம்பர், அக்டோபர் மாதங்களில் இந்த புனித பயணம் நடைபெறும். ஆசிரமத்தில் நேரடியாக வர விரும்புவோர்கள் நாகர்கோவில் பேருந்து நிலையத்திலிருந்து 3 கி.மீ. தூரமுடைய திருவனந்தபுரம் நேசனல் ஹைவேயில் பார்வதிபுரம் ஸ்டாப்பில் இறங்கவேண்டும.

இந்த புனித யாத்திரையில் முக்கியமான பல புண்ணிய இடங்களுடையவும, பயணிகளையும் இணைத்துக் கொண்டு ஒருவீடியோபடம் எடுக்கப்படும் இதற்கான செலவை தருபவர்களுக்கு காசட் வழங்கப்படும்.

பயண வேளையில் ஒரு வேளை இயற்கை சீற்றம், பந்து, கலவரங்கள் முதலியவற்றால் விபரீதங்கள் நடந்து பயணிகளுக்கும் புனித யாத்திரைக்கும் ஏதாவது கஷ்டநஷ்டங்கள் ஏற்படுமாயின் அதற்கு இப்புனிதபயணம் தலைமை ஏற்று நடத்துபவர்கள் பொறுப்பல்ல.

## ஓர் முக்கிய அறிவிப்பு

கன்னியாகுமரி மாவட்டத்தில் நாகர்கோவில் பார்வதிபுரத்தில் செயல்பட்டுவரும் ஸ்ரீ சாரதா-மந்திரம் ஆலயங்கள் தோறும் திருவிளக்கு பூஜை, சமயமாநாடு, சத்சங்கம் மற்றும் குழந்தைகளுக்கான சமயவகுப்பு மூலமாக இந்து சமயத்திற்கு தொண்டாற்றி வருகின்றது. மந்திரத்தில் அன்னதா-னத்திற்கான வழிமுறை செய்து அதற்கென ஒரு அன்னதான பண்டும உருவாக்கப் பட்டுள்ளன. மேற்படி ஆக்க பணிகளுக்கான செலவுகள் பக்த-பெருமக்களின் உதவிகள் மற்றும் நன்கொடை-களினால் செயல்பட்டு வருகிறது. இப்பணிகள் மேலும் ஊக்கமடைய தங்களால் ஆன உதவிகளை செய்ய வேண்டுகிறோம்.

இந்த வருட புனித பயணத்திற்கு இல்லாத சிறப்பு வரும் வருட (1996) புனித பயணத்திற்கு உண்டு. கங்கோத்ரி, யமுனோத்ரி, கேதார்நாத், பத்ரிநாத் என்ற புனித தலங்களை உள்ளடக்கிய **சதுர்தாம யாத்திரையும்** காசிஹிமாலய யாத்திரையுடன் நடைபெறும் என்பதை தெரிவித்துக் கொள்கிறோம்.

இவண்,
**சுவாமி அம்பிகானந்தா**



# காசி ஹிமாலய யாத்திரிகள் அனுப்பும் விண்ணப்பம்

பெயர் :

ஆண்/பெண் :

தந்தை/கணவன் :
வயது :

வீட்டு பெயர் :

ஊர் :

கிராமம்/பட்டணம்

மாவட்டம் :

தபால் நிலையம்
& பின்கோடு

டெலக்ராம் ஸ்டேஷன்:
(வீட்டிற்கு பக்கத்திலுள்ள)

வேலை :

போண் எண் :

முக்கியமான உறவினர் விலாசம்

புறப்படும் ரெயில்நிலைய பெயர்:

திரும்ப இறங்கும் இடம்:

முன்பணம் அனுப்பும் ரூ:

இடம் :

நாள் : ஒப்பம்.

---

**N.B:** முன்பணத்துடன் இவ்விண்ணப்ப படிவமும் அனுப்ப வேண்டும்.